# மூலிகை மணி

மலர் 12 | நள ௵ வைகாசி மீ மே - 76 | இதழ் 7

வேலூர் மருத்துவர் :- ஆ. இரா. கண்ணப்பர்



194-வது மூலிகை

விலை 50 காசு





இலவமரம்

மூலிகை வளமே! நாட்டு வளம்!

# 'மூலிகை மணி'

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50 பைசா

---

## வைகாசி இதழில்

(சிறப்புக் கட்டுரைகள்)



மேல் அட்டை: ஓவியர் விஸ்வநாதன் (DFA)

---

## மூலிகை மணி சந்தா விபரம்

| உள் நாடு | மலேஷியா, சிங்கைக்கு |
|---|---|
| 1 ஆண்டு 6-00 | கப்பல் வழி 13 20 விமான மூலம் 20-40 |
| 3 ஆண்டு 18-00 | கப்பல் வழி 39-60 விமான மூலம் 61-20 |
| ஆயுள் சந்தா ரூ. 160 | ஆயுள் சந்தா ரூ 200 (கப்பல் மூலம்) |

---

தலைமை அலுவலகம்: மூலிகை மணி வேலூர் - 632001

சென்னை அலுவலக முகவரி: மூலிகை மணி, 7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை - 600 017.

தொலைபேசி: 445689 (சென்னை)

---

உ

# சிந்தும் ஒளி மதி முகத்தோன் !

⁂

ராகம் : கானடா] [தாளம் : ஆதி.

பல்லவி

கந்தனைக் காணாது தவிக்கிறேனடி - அவன்
காதலால் மனம் வாழ துடிக்கிறேனடி (கந்தனை)

அனுபல்லவி

சொந்தமாய் அருகே வந்து சுந்தரமுகம் காட்டி
சிந்தை கவர்ந்தெனை சிரித்து மகிழ்வித்த
- எந்தன் (கந்தனை)

சரணம்

பந்த வினை நீங்கும் உமை மைந்தனவன்
தந்தை சிவன் மனங்குளிர மந்திரமு மோதியவன்
சிந்தும் ஒளி மதிமுகத்தோன் செந்திலுறை
ஆறுமுகம்
சந்தமும் நினைந்துருகும் எந்தனையாட்
கொள்வானோடி (கந்தனை)

- கலாபாரதி -

## மூலிகைமணி ஆசிரியர்
## அவர்களிடம் நேரில் வந்து ஆலோசனை
## பெறவிரும்பும் அன்பர்கட்கு

சென்னையில் அனைத்து நாட்களிலும் சந்தித்து
மருத்துவ ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம்.
காலை 9 மணி முதல் 12 மணி வரை
பகல் 3 மணி முதல் 5 மணி வரை
ஆலோசனைக் கட்டணம் உண்டு
தொலைபேசி : 445689

பஸ் ரூட் :

9, 10, 47, 47A திருமலைபிள்ளை ரோடில் மணியம்ஸ்டோர் ஸ்டாப்பிங்கில் இறங்கினால் இரண்டு நிமிடத்தில் மேற்கண்ட முகவரிக்கு வந்து விடலாம்.

கோடம்பாக்கம் ரயில் நிலையத்திலிருந்து ஹபிபுல்லா ரோடு வழியாக வரலாம்.

மற்ற பஸ் ரூட்கள் :

17, 17B, 17C, 17D, 11D, 25, 25B, 25C, 37, 37B, 37D, என்கிற பஸ்ஸில் ஏறி மாட்டு ஆஸ்பத்திரியில் இறங்கி வரலாம்.

ஆஸ்துமா, குன்மம், மேக நோய்கள், மூலம் கண்நோய்கள் போன்றவைகளுக்கு குறிப்பிடத்தக்க வகையில் மூலிகை சிகிச்சை அளிக்கப்படும்.

**மருத்துவர் : ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.**
7, அருளாம்பாள் தெரு, தி. நகர்
சென்னை-17—தொலைபேசி : 445689.

---

எமது மருந்துகளும் வெளியீடுகள், பழைய மூலிகைமணி இதழ்களும் கீழ்கண்ட இடங்களில் கிடைக்கும்.

**மூலிகைமணி**
7, அருளாம்பாள் வீதி,
தியாகராய நகர்
சென்னை - 600 017.

**மூலிகைமணி**
23, கிளப் ரோடு கிழக்கு
ஷெனாய் நகர்
சென்னை - 600 030.

உ

முருகா

ஐந்துகரத்தனை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
நந்திமகந்தனை ஞானகொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)

மலர் 12 ] நள ஹூ வைகாசி மீ மே-76 [ இதழ் 7

# வாசக அன்பர்கட்கு ஒரு வேண்டுகோள்!

அண்மைக் காலத்தில், தமிழ் மருத்துவம் பற்றிய ஆராய்ச்சிகள் ஊக்கத்துடன் பலரால் மேற்கொள்ளப்பட்டு, பல்கலைக் கழகங்களின் பார்வையிலும் பட்டு. அதனை அறிய—ஆய்வு செய்யப் பலர் முன்வந்துள்ளனர். பல்லாண்டுகட்கு முன்னரே வந்திருக்க வேண்டிய இவ் வுணர்வு, பல்வேறு காரணங்களால் புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளது.

தி. மு. க. அரசின் ஆதரவு. மூலிகை மணியின் இடைவிடாத பிரசாரம், ஆகியவை, தமிழ் மருத்துவம் தமிழகத்தில் மறுமலர்ச்சி அடைவதற்குப்பக்கபலமாக உள்ளன. இவற்றிற்கெல்லாம் மூலமாகஅமைந்தவை பண்டைய சித்தர்களின் படைப்பு உண்மையான கண்டுபிடிப்புகளாக இருந்த காரணமேயாகும். 100 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த வள்ளல் பெருமான் ஆரும் திருமுறையில், உடல் சக்திக்கும் வளர்ச்சிக்கும், தூதுவளை, வல்லாரை, கரிசாலை ஆகிய மூன்று மூலிகைகளை அன்றாடம் பயன்படுத்தி வருவதால் உடல் பிணியற்று இருக்கும் என்கின்றார். இவர் கருத்து வெறும் கற்பனையில் நிச்சயம் தோன்றியிருக்க முடியாதென்பதை இம்மூன்று மூலிகைகளையும் தற்கால அறிவியல நெறிப்படி ஆய்வு செய்து பார்க்கும்போது புலனாகிறது. இங்ஙனம் அனுபவ உண்மைகளைப்பின்னணியாகக் கொண்ட காரணத்தால் தான் தமிழ் மருத்துவம் பல்வேறு காலங்களில்-- காரணங்களினால், ஏற்பட்ட எதிர்ப்புகளையெல்லாம் தாங்கி வளர்ந்து வருகிறது.

'தமிழ் மருத்துவம்' மறுமலர்ச்சி அடைந்து வரும் தற்காலத்தில், அதனைப் பற்றிய முழு விவரங்கள், உண்மைகள் ஆகியவற்றை அறிய முடியவில்லை. நூற்றுக்கணக்கான மருத்துவ நூல்கள் தனிப்பட்டவர்களிடமும், பொது நிறுவனங்களிடமும் தொடுவாரின்றி உள்ளன.

என்போன்று அயராது இத்துறையில் ஆய்வுசெய்து புதியஉண்மைகளை வெளியிட விரும்புவோருக்கு, இத்தகைய இடர்ப்பாடுகளைத் தகர்க்க வேண்டியுள்ளது.

'சித்த மருத்துவம்' என்றால் என்ன ? என்ற அடிப்படையான கேள்விக்கு ஆராய்ச்சி பூர்வமாக ஒரு விளக்கம் தருவதற்குரிய வழிவகைகளை இனியும் கண்டுபிடிக்காமல் இருப்பது நன்றன்று. மேற்கண்ட அடிப்படைக் கேள்விக்குரிய ஆராய்ச்சி விடையை உலக அறிஞர்கள் ஏற்குமளவுக்கு நாம் படைப்பதற்கு மூலமாக உள்ளவை, மறைக்கப்பட்டும் - ஒதுக்கப்பட்டும் உள்ள தமிழ் மருத்துவ நூல்களேயாகும்.

எனவே வாசக அன்பர்கள், சித்த மருத்துவத்திற்கு ஆற்றும் சிறப்பான பணியாகக் கீழ்க்கண்ட மூன்று உதவிகளை எனக்கு உடனடியாகச் செய்தருள வேண்டும்.

(1) வாசக அன்பர்கள் ஒவ்வொருவரும் அவர்களிடத்திலிருந்தாலும் சரி, அவர்கள் உற்றார், நண்பர் ஆகியவர்களிடத்திலிருந்தாலும் சரி, ஓலைச்சுவடியோ, அச்சடித்த நூலோ, அல்லது செல்லரித்த நூலாக இருந்தாலும், அந்த நூல்களை—ஓலைச் சுவடிகளைப் பற்றிய விவரங்களை எனக்கு தங்கள் முகவரியுடன் தெரிவிக்க வேண்டுகிறேன். விலைக்குக் கொடுப்பதாக இருந்தாலும் சரி, அல்லது அன்பளிப்பாகத் தருவதாக இருந்தாலும் நன்றியுடன் அவைகள் ஆராய்ச்சியின் பயன் கருதி ஏற்கப்படும்.

(2) நூலினை அளிக்க விரும்பாதவர்கள், கீழ்க்கண்ட விவரங்களையாவது அளித்தால் போதுமானதாகும்.

நூலின் பெயர் ? ஓலைச்சுவடியா ? — சுவடியின் பெயர் — ஆசிரியர் பெயர் - பதிப்பித்த ஆண்டு — பதிப்பாளர் பெயர்; முகவரி; விலை, பக்கங்கள்.

ஆகிய விவரங்களை அறிவித்தால் .யான் அவற்றை முடிந்தபோது வந்து பார்வையிட்டு ஆய்வுக் குறிப்பு தயாரிக்க ஏதுவாகும்.

(3) இதுவன்றி, நாட்டுப்புறப் பாடல்களில், பழமொழிகளில், விடுகதைகளில உள்ள மருத்துவ செய்திகளையும் வாசக அன்பர்கள்திரட்டி அனுப்பினால் அவற்றை மூலிகை மணியில் வெளியிடவும் வாய்ப்புண்டு. ஆய்வு செய்வதற்கும் வழி ஏற்படும்.

எனவே வாசக அன்பர்கள் சிரமம் பாராது, நம் நாட்டு மருத்துவக் கலையின் மேன்மை கருதி இம்மூன்று வகையான உதவிகளை உடனடியாக வாய்க்கின்ற வழிகளிலெல்லாம் மூலிகை மணிக்குத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்.

— க. வே.

நூல்கள், ஓலைச் சுவடிகள் மற்றும் விவரங்கள் அனுப்ப வேண்டிய முகவரி:

**மூலிகை மணி**

**7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை - 600 017.**




## 194-வது மூலிகை

# இலவம்

உலகெங்கும் உள்ள தாவரங்களின் எண்ணிக்கை மூன்று லட்சத்திற்கும் மேலாகும் எனத் தாவர இயலார் கணித்துள்ளனர். மனிதன் தோன்றுவதற்கு முன் தோன்றி, மனித நலத்திற்கு மட்டுமல்லாது மற்ற உயிர்களின் வாழ்வுக்கும் தம்மையே அர்ப்பணித்தவை தாவர இனங்கள். எனவே தான்' தாவரங்களைத் தெய்வமாகவே வணங்கினர் நம் முன்னோர்கள். ஏறக்குறைய நூறு வகையான செடி கொடிகளைப் பற்றித் தமிழ் இலக்கியத்தின் தொன்மை இலக்கியமாகிய சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. பிற்காலத்தில் அவற்றில் பெரும்பாலானவை மருத்துவப் பயனாகும் மூலிகைகளாயிற்று. இன்றும், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் பல்வேறு செடி கொடிகளை இனம் கண்டு அவற்றைத் தமிழ் மருத்துவர்கள் பயன்படுத்தி வருகின்றனர். மூலிகைகளைத் தொன்மைகால முதலே மருந்தாகப் பயன்படுத்தியதில் தமிழர்கள் முன்னணியில் முன்னோடியாக திகழ்ந்தனர் எனலாம்.

'மருந்து கொண் மரம்' (புறம்)

'மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
நயனுடையான் கண்ணே உள.' (குறள்)

எனக் குறிப்பிடும் பழைய இலக்கியங்கள் மூலம், தமிழர்களின் மூலிகை மருத்துவ அறிவு புலனாகிறது அன்றோ !

### சங்க இலக்கியத்தில் இலவம்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் தோன்றிய சங்க நூல்களான

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலான நூல்கள் குறிப்பிடும் பல்வேறு மரவகைகளில் மிகச் சிறப்பாக இடம் பெற்றது 'இலவமரம்' இவ்விதழ் அட்டைப் படத்திலுள்ள இலவ மரத்தின் வடிவம், வரலாறு, வாழ்வு பற்றி அகநானூறு ஐங்குறு நூறு போன்ற நூல்கள் விரிவாகக் கூறு கின்றன.

'இலையில மலர்ந்த முகையில் இலவம்'

(அகம்)

'........................................ சாரல்

இலையில மலர்ந்தவோங்குநிலை இலவம்.'

(ஐங்குறு நூறு. 338)

எனும் மேல் கூறிய பாடல்களில் இலவ மரம் பற்றிய குறிப்பு உள்ளது.

## இலவமரம், - பொது விவரம்

மிகப் பெரிய மரமாக வளரும் மரங்களில் இலவமும் ஒன்று. அகல மாகவும் பரவலான கிளைகளையும் கொண்டது இம்மரம். நூறு அடிக்கு மேல் உயரமாக வளரக்கூடிய இம்மரம் முட்களையும கொண்டதாக இருக் கிறது.

'நீளரை இலவம்'

'வோங்கு நிலை இலவம்'

என்று இலக்கியங்கள் குறிப்பிடுவதிலிருந்து இதன் உயரததை கணிக்க லாம். இலவ மரத்தை அதன் பூவைக் கொண்டு எளிதில் கண்டுபிடிக்க லாம். பொதுவாக ஆழ்ந்த சிவப்பு நிறத்தில் பூக்கும் இதன் மலர்கள் அற்புதமான தெய்வீக சக்திகளைக் கொண்டதாகக் கருதப்பட்டு இம்மலர், பட்டை ஆகியன ஆன்மீக வழிபாட்டிற்கு பயன்படுகின்றன. கிண்ணத் தைக் கவிழ்த்தாற் போன்ற வடிவம் உடைய இதன் பலர்களை ஒருமுறை பார்த்து விட்டால் மறக்க முடியாது. பச்சை நிறத்துடன் கூடிய விரைப் பான இலைகள் ஐந்து முதல் எழு வரை சிற்றிலைகளாகக் கொண்டவை. பார்ப்பதற்கு விசிறிபோல் தோற்றமளிக்கும். இலை உதிர் காலத்தில் இமமரம் பூக்க ஆரம்பிக்கும். இலைகள் உதிர்ந்து அப்பொழுது வரிசை யாகப் பூத்திருக்கும் காட்சி விடியற்காலையில் காணப்படும் சில விண்மீன் கள் போன்றிருப்பதாக பழங்காலப் புலவர்கள் கற்பனை செய்துள்ளார்கள். இதன் பூ சிவந்து காணப்படுவதால் நெருப்புக்கு ஒப்பிட்டு 'எரிப்பூ' என்றே அழைத்துள்ளனர். கடும காற்றில் இம்மரத்தின் பூக்கள உதிர்

வதைக் கண்ட புலவன், இடிமிடித்து மின்னல் விழுவதற்கு இதனை உவமிக்கின்ருன். பெரும்பாலும் இலவமரம் மலை ஓரங்களில் பூப்பதால் அதனைக் கண்ட சங்கப் புலவன் ஒருவன் மலையே பற்றி எரிவதாகக் கூறுகின்ருன். இங்ஙனம் புலவர் நாவில் பொருந்தி புகழ் பெற்ற இலவமரம் பிற்காலத்தில் மருத்துவத்திலும் அரிய இடம் பெற்றுள்ளது.

## இருவகை இலவம்

இதுவரை இலக்கியத்திலிருந்து கூறப்பட்ட இலவமரம் தற்காலத்தில் முள்ளிலவம் என்று அழைக்கப் படுகிறது. இதுவேயன்றி பஞ்சிற்காக பெரிதும் வளர்க்கப்படுவது சாதாரண இலவம் என்று கூறப்படுகிறது. வெண்மையான நிறம் கொண்ட இது, கவர்ச்சியற்ற பூக்களே பூக்கும். இவ்விரு வகை இலவத்திற்கும் பொதுவான மருத்துவச் செய்கைகள் இருந்த போதிலும், முள்ளிலவம் அதிகமான மருத்துவ குணங்களைக் கொண்டதாகும்.

மருத்துவ குணங்கள் : இலவ மரத்தின் இலை, பூ, விதை, பிசின், பஞ்சு, வேர் அனைத்தும் மருத்துவப் பயன் தருவதாகும். இனிப்பு, துவர்ப்பு, கைப்பு ஆகிய மூன்று சுவைகளையுடையதாகும். பொதுவாக குளிர்ச்சி தரும். சிறப்பாக சிறுநீரகங்களில் தோன்றும், உபாதைகளுக்கு இலவம் நிவாரணம் தரும்.

### சாதாரண இலவம் (வெண்-இலவு)

வெண்ணிற மலர்களையுடைய சாதாரண இலவ மரத்தின் பட்டையை இடித்து அத்துடன் மிளகு 6, சீரகம் ஒரு சிட்டிகை சேர்த்து காய்ச்சி வடிகட்டி தினமும் வெறும் வயிற்றில் 50 மில்லி குடித்துவர நீர் எரிவு, தந்துமேகம் ஆகியன விலகும்.

### இடுமருந்து முறிய

துர்குணத்தால், தீய எண்ணத்துடன் செய்யப்படும் இடு மருந்தின் தீய விளைவுக்கான வயிற்றுப்புண், பசியின்மை, மனம் பேதலித்தல் ஆகியன குணமாக இலவ மரத்தின் பட்டையை அரைத்து நெல்லிக்காயளவு வெறும் வயிற்றில் காடி நீரில் கரைத்து, கலக்கி, குடிக்க இடுமருந்தின் வேகம் முறிந்து மேற்கண்ட நோய்கள் விலகும்.

### முள்ளிலவு — மருத்துவப்பயன்

இலையின் பயன் : சிவப்பு நிற மலர்களை பூக்கும் இம்மரத்தின்

இலையை அரைத்து பசுவின் பாலில் கலக்கி கொடுக்க வாதநோய் அழற்சி கள் நீங்கும்.

பூவின் பயன் : சிவந்த இம்மலர்கள் நான்கு அல்லது ஐந்து எடுத்து காம்பினை நீக்கி ஒரு குவளை நீர் விட்டுக் கொதிக்க வைத்து அரை குவளையாக்கி இரவில் குடிக்க காலையில் மலச்சிக்கல் உடைந்து வெளி யேறும்.

## இரத்த பித்தம் நீங்க

உலர்ந்த இதன் பூவுடன் கசகசா ஒரு டீஸ்பூன் சேர்த்தரைத்து வெள்ளாட்டு பாலில் கலக்கி காலை மாலை இருவேளை ஐம்பது மில்லி கொடுத்து வர இரத்த பித்தநோய் தணியும்.

## விதையின் பயன் :

அதிக போகம், மேக உஷ்ணம், காரணமாகவரும் நீர்சுருக்கு, வாயிலிருந்து இரத்தம் வெளியேறுதல், சீழ்ப்பிரமியம் ஆகியன குணமாக கீழ்கண்ட முறை பயன்தரும்.

1 இலவ மரத்து விதை ஒருபங்கு

2 சீரகம் அரைபங்கு

3 வால் மிளகு கால் பங்கு — மூன்றையும் நன்குஅரைத்து காலை யில் நெல்லிக்காயளவு சாப்பிட்டு மோர் குடித்து வர அவை தணியும்.

## பிசின் :

இம்மருந்தின் பிசினை சேகரித்து, பொடித்து, 1 கிராம் அளவு இள நீரில் கலக்கி தினமும் இருவேளை கொடுத்துவர சீதபேதி, அஜீரணபேதி, நாட்பட்ட மூத்திரக் கோளாறு ஆகியன தீரும்.

## வேரின் பயன் :

இதன் வேரைக் கஷாயமிட்டு உட்கொண்டுவர தவறுன பெண் போகத்தால் வரும் மேக நோய்களுக்கு நிவாரணம் அளிக்கும்.

## இலவம் பஞ்சு :

இலவ மரத்தின் காய் பச்சையாக வளர்ந்திருக்கும். முற்றிவெடிக் கும்பொழுது விதையுடன் கூடிய பஞ்சு சிதறும். பண்டைக்காலத்தி

லிருந்தே தலையணைக்கும், இரணங்களுக்கும் பயன் படுத்தியதாகக் கூறப் படுகிறது. சீழுடன் கூடிய இரணங்களுக்கு இப்பஞ்சை வைத்துக்கட்ட சீழ் வற்றிப் போகும். இலவம் பஞ்சு தலையணை படுப்பதற்கு நித்திரைக்கு சுகம் தரும். ஆனால் சற்று உடலுக்கு சூடு உண்டாக்கும் குணம் உடைய தாகும். செடுதல் உண்டாகாது. ஆழ்ந்த நித்திரைக்கு உறுதுணைசெய்யும்.

## பழமொழியில் இலவமரம்

"இலவு காத்த கிளிபோல" என்ற பழமொழி வழக்கிலுள்ளது. இதன் பொருள் மாங்காய் போன்று இலவ மரத்தின் காய் தோற்றமளித் தாலும் மாமரம் போல் பழுக்காது உண்ணமுடியாத பஞ்சையே தரக் கூடியது இலவம். எனவே தான் கிளி எவ்வளவு காலம் காத்திருந்தாலும் மாங்காய் போல் இலவங்காய் உதவாது என்பதை குறிப்பாக உணர்த்து வது இப்பழமொழி.

இங்ஙனம் இலவமரம் இலக்கியத்திலும் மருத்துவத்திலும் அன்று முதல் இன்று வரை புலவர்களாலும், மருத்துவர்களாலும் அதன்பயன் கருதி பாராட்டப் படுகிறது. நம் நாட்டு மூலிகை இனத்தின் மரவகை களில் மாமரம் வில்வமரம், வன்னிமரம் ஆகியவற்றிற்கு இணையாக வைத்துப் போற்றப்பட வேண்டிய மரம் இலவமரம் என்பதில் ஐயமில்லை.

தந்துமேகஞ் சிறுநீர்த் தாரை வெப்பம் வாய்
உந்தவரு பேதியிவை யோட்டுங்காண் — முந்திக்
கிளர்வள்ளை பாயும் வரிக்கெண்டை விழியாய்
வளர் முள்ளிலவ மரம். (கு மு.)

# நோயும் மருந்தும்!

வினா: தாங்கள் காலை மருந்துடன் தேனும், மாலை மருந்துடன் நெய்யும் குழப்பி உண்ண வேண்டும் என்று எழுதியுள்ளீர்கள். ஆனால், "தேனும் நெய்யும் இணைய சாப்பிடுவது விஷத்தை உண்பதாகுமென்று திருக்குறளில் கூறப்படுகிறது. இதன் விவரம் விளக்க வேண்டுகிறேன்.

விடை: குறளில் கூறியது ஒரே சமயத்தில் தேனும் நெய்யும் கலந்து உண்ணலாகாது என்பது பொருள். ஆனால் இங்கே காலையில் தேனில் மாலையில் நெய்யில் குறிப்பிட்டிருப்பது இது மருந்திற்கு அனுபானமாகும். முன்னோர்கள் வகுத்த வழி- ஆண், பெண் பெரியோர் சிறியோர் எல்லோரும் கடைபிடித்து வரலாம். இதனால் எந்தவித இடையூறும் உண்டாகாது.

வினா: என்னுடைய மகன் வயது 2 வருடம் 6 மாதங்கள் ஆகிறது. பிறந்தது முதல் ரொம்பவும் மெலிந்து பலவீனமாக இருந்தான். டாக்டரிடம் காண்பித்ததில் ஈரல் ரொம்பவும் பலஹீனமாக இருக்கிறது என்று LIV-52 Drops என்ற டானிக் 3 பாட்டில்கள் கொடுத்தார். அதை சாப்பிட்ட பொழுது கொஞ்சம் தேவலையாக தோன்றியது. ஆனால் வர வர இப்பொழுது கை, கால்கள், கழுத்து எல்லாம் மெலிந்து வயிறு மாத்திரம் பெருத்து தோன்றுகிறது. பச்சை நரம்புகள் ஓடி மினுமினு என்று இருக்கிறது. ஆனி மாத இதழில் இது போன்று இருந்தால் சூனம் வயிறு என்பதாகக் கூறினீர்கள். ஆகவே தாங்கள் என் மகனுக்கு குணமளிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். உடன் பதில் அனுப்புவீர்கள் என ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

விடை: ஐயா, தங்கள் மகனுடைய சூனம் வயிறு நீங்க தினமும் பொடுதலை கீரையை அரைத்து எலுமிச்சங்காயளவு பால்லி தண்ணீருடன் கொடுக்கவும். இது தொடர்ந்து 20 நாள் செய்ய குணமாகும்.

விஞ: எனக்கு வயது 18. முகத்தில் பருக்கள் நிறைய வாரி இறைக்கின்றன. இதற்கு என்ன செய்வது?

விடை: அம்மாம் பச்சரிசி கீரையை தினமும் பருப்புடன் சேர்த்து ஒரு வாரம் சாப்பிடவும்.

விஞ: நான் மிக சிறந்த கட்டான உடலமைப்புப் பெற விரும்புகின்றேன். அதற்கான பயிற்சிகளையும் செய்து வருகின்றேன். இதற்கு உடம்பிற்கு நல்ல சக்தியைத் தரும் மருந்து எம்மருந்து என தெரிவிக்கவும். பயிற்சியின்போது நெஞ்சு வலியெடுக்கிறது இதற்கு என்ன செய்வது?

விடை: தம்பி, உன்உடல் பலம் உரம்பெற சீமை அத்திபழம் ஒன்று, முழுகடலை ஒருபிடி இரண்டும் இரவில் ஒரு மண் சட்டியில் ஊற வைத்து விடிந்ததும் நன்ருக கொதிக்கக் காய்ச்சி அந்த நீரை வடிகட்டிக் கொண்டு சர்க்கரை பாலுடன் சேர்த்து காப்பி போல் நாற்பது நாள் குடிக்கவும். உடல் பலம் பெறும்: நெஞ்சு வலிக்கு செம்பரத்தம்பூவை கஷாய மிட்டு சாப்பிட்டு வந்தால் நெஞ்சுவலி போகும்.

விஞ: எனக்கு சிறு வயது முதலே தலைமுடி அடர்த்தி கிடையாது. தற்போது எனக்கு வயது 20. இப்போதுஎனக்கு முடி அடர்த்தியாக வேண்டுமென ஆசை. அது நிறைவேறுமா? என்ன வழி? மேலும் எனக்கு முடி கருப்பாக வழி இருக்குமாகில் தயவு செய்து தெரிவிக்கவும்.

விடை: வெள்ளை பூ உள்ள கரிசலாங்கண்ணி சாறு எடுத்து அந்த அளவு நல்லெண்ணெயுடன் காய்ச்சி வைத்து கொண்டு தலைக்கு தடவிவர தலை முடி அடர்த்தியாக வளரும். 40 நாள் செய்து பார்க்கவும்.

விஞ: கீரை இனங்களை சமைக்கும்பொழுது நீரை இறுக்கக் கூடாது. புளிச்சக்கீரை என்னும் கீரையை அவித்து நீரை இறுத்துவிட்டு பிறகு தாளிக்கிருர்கள். கேட்டால் புளிப்பு வாயில் வைக்க முடியாது என்று கூறுகிருர்கள். சொன்னபடியே நீரை இறுக்காமல் சாப்பிட முடியவில்லை. நீரை இறுக்காமல் செய்யும் முறை பற்றி தங்களுக்கு தெரிந்தால் கூறவும்.

விடை: கீரையினங்களை கடையல், பொரியல் செய்து சாப்பிடும் போது நீரை இறுக்கக் கூடாது. ஆனால் புளிச்சகீரை போன்ற அதிக சாரமுள்ள கீரை இனங்களை அவித்து நீரை இறுத்து விடுவது தான் நல்லது.

வினா: குழந்தை வெளுப்பாய் நன்றாக பிறக்க வேணு மானால் என்ன செய்ய வேண்டுமென்பதை விவரமாக கூறவும்.

விடை: ஐயா, 7-ம் மாதம் முதல் கொண்டு இரவில் சிறிதளவு குங்குமப்பூ பாலில் போட்டு காய்ச்சி குடித்துவர குழந்தை சிவப்பாய் பிறக்கு ம்.

வினா: என் தந்தைக்கு வயது 67. தொண்டை கம்ம லும் நெஞ்சு வலியும் ஒரு வருடமாக தொடர்ந்து இருந்து வரு கிறது. ஆங்கில வைத்தியத்தில் பலன் கிடைக்கவில்லை. இந்த நோயினை நீக்கிட மூலிகை மணியில் தாங்கள் கூறும் மருந்து என்ன?

விடை: ஐயா, 'சளி நீங்க' தூதுவளை சிறந்தது. நெய்யுடன் சமையலில் விடாமல் 1 வாரம் பகலில் சாப்பிடச் சொல்லவும். தொண்டை கட்டு நீங்க கஸ்தூரி கோரோசனை மாத்திரையை தேனில் குழைத்து சிறி தளவு கற்பூரவல்லி சாறு சேர்த்துக் கொடுக்க தொண்டை கட்டு யாவும் போகும். செய்து குணம் பெறுக.

வினா: கைகள், கால்கள், விரல்கள், ஆகியவற்றில் உரோமம் அதிகமாக வளர்ந்துள்ளதே இதை நீக்க என்ன செய்யலாம்? வயது 20.

விடை; ஐயா, இயற்கையாகவே ரோமம் வளருவதை தடுக்க இயலாது. அப்படித் தடுத்தால் அது வேறு வகையான வியாதிகளுக்கு இடமளிக்கும்.

வினா: நான் ஒரு பாடகன். பாடல்களை பாடும்போது தொண்டை அடைத்துக் கொண்டு மேலே பாட முடியவில்லை. மேலும் மூச்சு நிறைய வாங்க வேண்டியிருக்கிறது. குரல்

இனிமையாக மாறுவதற்கும் வழி இருந்தால் தயவு கூர்ந்து கூறவும்.

விடை: பாடகர்களுக்கு குரல் இனிமையாக ஆடாதோடை சர்பத் மிகவும் சிறந்தது. அதை கற்பூரவல்லி சாறுடன் சேர்த்து 20 நாள் குடித்தால் குரல் இனிமையாக வரும்.

வினா: எனக்கு வயது 18 ஆகிறது. உயரம் 5 அடி தான் உள்ளேன். உயருவதற்கு வழி உண்டா? குழந்தையில் நான் கொஞ்சம் நிறமாகவும், இப்பொழுது கொஞ்சம் குறைந்து விட்டதாகவும் சொல்கிறார்கள். நிறம் கூடி வருவதற்கு வழி உண்டா? தாங்கள் தெரிவிக்குமாறு கேட்டு கொள்கிறேன்.

விடை: உயரமாவதற்கு மருந்துகளால் ஏதும் இயலாது. தேக பயிற்சியில் கம்பி வளையம் மாட்டி அதில ஊஞ்சல் போல் ஆடினால் அதில் பலன் உண்டு. ஆகாரத்தில் கீரையினங்களை நிறைய உண்டுவர வளர்ச்சி தெரியும். உடல் நிறம் அந்தந்த ஊர் தண்ணீருக்கு ஏற்றவாறு அமையும். ஓடும் ஆற்று நீரில் குளிப்பதால் நிறம் மாறும். மற்றபடி மருந்தால் நிறத்தை மாற்ற முடியாது.

வினா: இன்னும் எனது கால்களில் தொடை இடுக்குகளில் சதையைச் சுற்றி கருப்பாக படர்ந்து இருக்கின்றது. அரிப்பு தாங்க முடியவில்லை. எவ்வளவோ ஆங்கில வைத்திய முறைகளில் சரியாகவில்லை. அதற்கு ஒரு மூலிகையை கூறுமாறு கேட்டு கொள்கிறேன்.

விடை: ஆங்கில வைத்தியத்திற்கு பிறகு மூலிகை சிகிச்சை செய்ய வந்தவரே! உமக்கு கக்கூஸ் பற்று வந்துள்ளது. இதற்கு எமது மகா மூலிகை எண்ணெயே சிறந்தது. இதை எமக்கு 35-00 M. O. அனுப்பி பார்சல் வழி பெற்று உபயோகித்து குணமடையுங்கள்.

வினா: ஐயா, மாந்திரிகம் என்பதன் மூலம் மனிதன் மீது 'ஏவி' அவ்வித ஏவலால் உடம்பில் பலவிதமான பாதிப்புகள் ஏற்படுத்தலாமா; அவ்விதம் ஏற்பட்டிருந்தால் அவை பல முயற்சி செய்து பலன் இல்லாதிருந்தால் அதை நிவர்த்தி செய்ய தங்களுக்கு தெரிந்த முறையிலே நிவர்த்தி உண்டா?

விடை: ஐயா, மாந்திரிகம் என்பது முறைகேடாக தொடர்ந்து வரும் ஒரு குருட்டுத் தொழில். இதனால் நல்ல நன்மைகள் எல்லாம் பொருமை, வயிற்றெரிச்சலால் அவைகளுக்கு ஏவல் பில்லி, சூன்யம் போன்றவைகளை உண்டாக்குகிறது. இது எல்லோரையும் தாக்குவதில்லை. அவரவர் பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் கெடுதலான பலன்தரும்போது தான் இது பலிக்கும். நல்ல சாஸ்திரங்கள் தெரிந்த மறையோர்கள் மூலம் அபிசேக ஹோமம் செய்வதால் இவை நிவர்த்தியாகும். தெய்வ பிரார்த்தனைகளால் நிவர்த்தியாகும். மற்றபடி இதை மாந்திரிகன் கொண்டு நிவர்த்தி செய்வது அந்த தொழிலுக்கு ஊக்கம் ஏற்படுத்தியது போலாகும். இந்த தொழில் மறைமுகமாகவே வளர்ந்து வரும். எனவே இந்த மாந்திரிகத்தை ஒழிக்க மனோ தைரியமும் தெய்வத்தின் பக்தியும், பாராயணமும் அவசியம் ஆகும். இவைகளால் நிச்சயமாக மாந்திரிகத்தை முறியடித்து விடலாம்.

வினா: நாயுருவி அரிசியை சாப்பிட்டால் ஒரு வாரம் பசியெடுக்காது என்பது உண்மையா? உண்மையாயின் எந்த முறையில் சாப்பிட வேண்டும். அல்லது பசியெடுக்காமலிருக்க வேறு மூலிகை இருந்தால் கூறவும்.

விடை: ஐயா, பசி எடுக்காமலிருக்க மூலிகையை நாடுவது கெடுதல். பசியெடுப்பது இயற்கை. அதை மூலிகைகளை கொண்டு தடுக்கலாகாது. அப்படி தடுத்தால் வேறு ஏதாவது கோளாறு உண்டாகும்.

வினா: மகா மூலிகை என்ற ஆகாச கருடன் கிழங்கை அரைத்து கொட்டை பாக்களவு ஆவின் பாலுடன் உண்டால் நரை மறையும். மேனி அழகு உண்டாகும். சர்வ நோயும் தீரும். பத்தியம் பாலன்னம் உண்ணவும். புளி, புகை ஆகாது. சாப்பிடலாமா?

விடை: மகா மூலிகை என்று ஆகாச கருடனைச் சொல்வதில்லை. ஆகாச கருடன் கிழங்கிற்கு சாகா மூலிகை என்று கூறுவர். கொட்டை பாக்களவு சாப்பிட்டு வந்தால் உடம்பின் ரத்தம் சுத்தியாகும். பாம்பு கடிக்குச் சிறந்தது. சர்வ விஷமும் போகும். சர்வ விஷ கடியும் இந்த சாகா மூலிகையால் போகும்.

# பொருள்களின்
# குண விளக்கம்

[ சென்ற மாதத் தொடர்ச்சி]

## எருமைபாற் குணம்

வாதத்திமிரை வரவழைக்கும் புத்தியினற்
தோதத் தெளிவைநனி போக்குங்காண்-கோதற்றே
யங்கத்துரு மருந்தை யன்றே முறித்துவிடும்
பங்கத் துறுமே திப்பால்.

(இ-ள்.) எருமைப்பால் திமிர் வாயுவைத் தருவிக்கும் தெளிந்தப் புத்தியின் கூர்மையையும் நல்லமருந்தின் குணத்தையுங் கெடுக்கும்.

## வெள்ளாட்டுப்பாற் குணம்

வெள்ளாட்டுப் பாலுக்கு மேவியநற்றீ பனமாந்
தள்ளாட்டு வாதபித்தஞ் சாந்தமாம்-உள்ளிரைப்புச்
சீதமதிசாரஞ் சிலேஷ்ம மரும் புண்ணுறும்
வாத சிலேசமும்போ மாய்ந்து.

(இ-ள்) வெள்ளாட்டுப் பாலினல் வாதபித்த தொந்தம் சுவாசம் காசம் சீதாதிசாரம் கபதோஷம் விரணம் வாதத்திலுண்டாகிய வீக்கம் முதலிய துன்பம் தீரும் நல்லபசியும் உண்டாமென்க.

## செம்மறியாட்டுப் பாற்குணம்

செம்மறிப் பால்பித்தஞ் சிலேஷ்மத்தை யுண்டாக்கும்
விப்மும் வயிறுமிக மேன்மூச்சாங்-கெ.ம்மை
வருமுலையாய் பத்தியத்தில் வாராது வாய்வாம்
பருகுவர்க்கு நாளும் பகர்.

(இ-ள்.) திரட்சியாய் வளர்ந்து வருவனவாகிய தனங்களையுடைய பெண்ணே! வாதருபமான செம்மறியாட்டுப் பால் பித்த சிலேஷ்மம் தொந்தம் வயிற்றுப்பிசம் மேற்சுவாசம் உண்டாகும் பத்தியத்திற்குத வாது வாய்வு யதிகரிக்குமென்க.

## யானைப்பாற் குணம்

வாதம்போத் தாதுபுஷ்டி வந்தடரும் வன்பலமோ
யாதுபித் தங்கூடி யழகுநிக்குந்-தாதுமலர்த்
தேனைப்பா லிற்கலந்த நிக்திப்பை போலிருக்கும்
யானைப்பா லுண்ண மவர்க்கு

(இ-ள்.) தேனும் பாலுங்கலந்த ருசிபோன்ற யானைப்பாலைக் குடிப்பவருக்கு வாதகோபம் நீங்கும். சுக்கிலவிருத்தியும் மிகு வன்மை யுங் பித்தசம்பந்தமான நோயும் தேக அழகும் உண்டாகுமென்க.

## குதிரைப்பாற் குணம்

விரிய விருத்தி விளைக்குமழ குண்டாகுங்
காரியத்திற் காமங் கதிப்பிக்கும்-வாரார்
கரகமெனபு செப்புமுலைக் காரிகையே கேளாய்
துரகதப்பால் செய்யுந் தொழில்.

(இ-ள்.) வாரினுலிருக்கிய பொற்கலசமெனப் புகலுங் கொங்கை களையுடைய மங்கையரே குதிரைப்பால் சுக்கிலப்பெருக்கத்தையும் சரீர வனப்பையும் புணர்ச்சியில் நிருவாகத்தையும் உண்டாக்குமென்க.

## ஒட்டைப்பாற் குணம்

ஒட்டைப் பாலுக்குமந்த மூவாதம் சூலையோ
டட்டகுணக கரப்பா னுவைதன்றி-மட்டிடாக்
காதிரைச்சன் பந்தமதி காசங சுவாசமுமா
மாதரைக்கு னுளும் வழுத்து.

(இ-ள்.) ஒட்டைப்பாலினுல் அக்கினிமந்தம் வாதசூலை எண்வித கரப்பான் காலநாதசெவிடு அக இருமல் இரைப்பு இவையுண்டாகும்.

(தொடரும்)

# கீல் வாயு

டாக்டர் P. M. வேணுகோபால், H P.I.M.

"கீல் வாயு" என்பது கீல்கள் அல்லது மூட்டுகளைப் பற்றி வரும் படியான நோயைக் குறிக்கும். உலக வழக்கில் கீல்களை பூட்டுகள், மூட்டுகள், பொருத்துகள் என பல பெயரால் குறிப்பிடப்பட்டிருக்கின்றன இப்பெயர்கள் எல்லாம் ஒன்றையே குறிக்கின்றன. கீல் வாயு நோயில் முக்கியமாக வேதனை (வலி) காண்பதால் வாதம் கேடடைந்தது என்று தெரிவிக்கப்படுகிறது. அதனாலன்றோ "கீல் வாயு" ஏன்று பெயர் வழங்கலாயிற்று. மற்றும் இந்நோயை "சந்துவாதம்", "ஆமவாதம்", "மூட்டு வாதம்" என்ற பல பெயர்களால் வழங்கி வருகின்றனர்.

கீல்வாயு என்றால் கீல்கள் தாபிதமடைந்திருக்கிறது என்பது விளக்கம்.

கீல்வாயு தனிப்பட்ட நோயாகவும் பிற நோய்களில் துணை நோயாகவும் காண்கிறது. கீல்வாயு நோயை நிதானிக்கும்போது "தனிநோயா அல்லது துணை நோயா" என்று அவசியம் கவனிக்க வேண்டும், ஏனென்றால் சந்து வாதம் அல்லது ஆம வாதம் என்பது சிறப்பான நோய். இந்நோயில் கீல் வாயு துணை நோயாக அமைகிறது. கீல்களில் அடிப்பட்டு தாபிதமடைந்தால் தனி நோயாக "கீல் வாயு" தோன்றும், ஆகவே சந்துவாத நோயில் கீல் வாயு குறிகுணமாக காண்கிறது. கீல் வாயு சந்து வாத நோயாகா.

கீல்வாயு நோயின் வகைகள் :

(1) தாபிதக் கீல்வாயு

1 மலைத்தகம்ப வாதம்
2 நரித்தலை வாதம்
3 சந்து வாதம்
4 வாத சுரோணிதம்
5 உதிரவாத சுரோணிதம்.

(2) தாதுகதக் கீல் வாயு

1 காளாஞ்சக வாதம்.

## தாபிதக் கீல் வாயு

மலைத்தகம்ப கீல்வாயு : இந்நோயில் கீல்களை தாக்கப்படுகிறது. படிப்படியாக கீல்களில் தாபிதத்தை அபிவிருத்தியாக்கிக் கொண்டே சென்று வீக்கத்தையும் வலியையும் உண்டாக்கி கீல்களை முடங்கச் செய்யும்.

காரணம் : இந்நோய் பெரும்பாலும் பெண்களைப் பாதிக்கிறது. 20 வயது முதற்கொண்டு 40 வயது வரையிலுள்ளவர்கள் அநேகமாக இந் நோய்க்கு இரையாவார்கள். 40 வயதிற்கு மேல் காண்பது துர்லபம். இந் நோய்கான அநேக முதற் காரணங்களுண்டு. முக்கியமாக தக்க சீவ சத்துள்ள உணவை உட்கொள்ளாமையாலும், மனோ விகற்பங்களுக்கு அடிக்கடி மனம் தளர்ந்து மெலிந்தமையாலும், பலக் குறைவாலும், நுண் கிருமியாலும் நோய்வர ஏதுவாய் இருக்கின்றன. உடலில் மற்ற உறுப்புகளில் தாபித மடைந்திருந்தாலும் வரலாம்.

நோய் நடை : ஆரம்பத்திலேயே கீலில் தாபிதம் ஏற்படுகிறது. முதலில் நுண்ணிய சவ்வு போன்ற அவயவங்கள் கீல்களினுள் தாபித மடைகிறது. நாளடைவில் பீத இழை வைப்பும் வெண்ணிற இழை வைப்பும் தாபிதமடைந்து அவைகளை தின்று விடுகிறது. அவைகள் தாபிதத்தால் நாச மடைந்ததால் மறுபடியும் அவ்வித இழைப்பு வைப்புகள் உண்டாவதில்லை. ஆதலினால் இவ்விழைப்பு வைப்புகள் தாபிதம் நீங்கினாலும் மறுபடியும் வளருவதுமில்லை இதனால் கீல்கள் அசைவில்லாமல் முடங்கி விடுகிறது. இவைகளைப் போலவே முருந்துகளும் நாளடைவில் கீல்களிலிருக்குப்படியான முருந்துகள் தின்னப்பட்டாலும் (நாசமடையப் பட்டாலும்) மறுமலர்ச்சி அடைவதில்லை. ஆகவே கீல்கள் அசைய வொட்டாதபடி செயல் புரியாமல் முடங்கிப் போகின்றன.

குறி குணங்கள் : ஆரம்பத்தில் இந்நோய் கண்டிருப்பதாக நோயாளனுக்குத் தெரியாது. பொதுவாக உடல் வன்மை குறைந்த தாகவும், பலம் குறைந்ததாகவும், உடல் கனம் குறைந்ததாகவும் நோயாளன் அறியக் கூடும். இவைகளை நோயாளன் பொருட்படுத்துவதில்லை. இந் நிலைமாறி மனோ நிலையும் குன்றிக்காணும். அன்றியும் வெளுப்பு நோயும், தோலில் சிற்சில பாகங்களில் மரக்கட்டை போன்ற உணர்ச்சியும். மார்பு படபடத்து அடிப்பதும், மிக்க வியர்வையும் அநேகமாகக் காணும். இவ்வமயம் பிரதானகுறி குணங்களும் தென்படும். அவைகளில் முக்கியமாக விரல் மூட்டுகளிலும் எலும்புகளிலும் வலி காணும். சிறு அசைவினாலும் மிக்க வலி காணும்.

ஆள் காட்டி விரல் மூட்டுகளும் நடு விரலைச் சார்ந்த மூட்டுகளிலும் வீக்கம் கண்டு வலிக்கும். இவ்வீக்கம் அநேகமாக இரண்டு கைகளிலும் காணும். மற்றும் இந்நோய் குறிகுணங்களைப் பொறுத்துப் பொறுத்துக் காட்டி முதிரும். ஆரம்ப நிலையில் சுரம் விட்டுவிட்டு காயும், உள்ளங் கைகளில் அமைந்த சிறு சதைகள் சுருங்கும். இச் சதைகள் சுருங்கினால் கை விரல்கள் கோணும். ஆள் காட்டி, நடு விரல்கள் பெருவிரல் பக்கமாக கோணி மடங்கும்.

சிலருக்கு நெறி கோளங்கள் தாபிதமடைந்து வீங்கிக் கொள்ளும். இந் நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு தூக்கம் அதிகம் இருக்காது. தூக்கமின்மையால் உடல் சோர்வு அசதி, பயம் ஏற்படும்.

தற்காலத்தில், பெண்கள் கருவுற்றிருக்கும்போது இந்நோய் மறைந்து விடுகிறது என்று கருதுகிறார்கள். அன்றியும் பிள்ளை பெற்ற தற்குப் பிறகு இந் நோய் தீவிரமாக வருகிறது என்றும் கருதுகிறார்கள். சிலர் இந் நோய் காமாலை நோயிலும் மறைகிறது என்றும் அபிப்பிராய படுகிறார்கள்.

நோய் கணிப்பு : மேற்சொன்ன குறிகுணங்கள் பலவோ முக்கியமானவைகள் சிலவோ கண்டால் நோயை கணிக்க முடியும். சில வேளைகளில் கணிப்பது கடினம். ஆகவே நூதன முறைப்படி 'எக்ஸ்ரே' படம் பிடித்து பார்ப்பது அவசியம்.

முடிவு : ஆரம்ப நிலையிலிருந்து இந்நோயை கணிக்கப் பெற்றால் தக்க பரிகாரத்தினால் 100-க்கு 20 பேர் பரிபூரண குணமடைகிறார்கள். இந்நோய் முதிர்ந்த பிறகு சிறப்பான மருத்துவத்தால் 100-க்கு 50 பேர் குணமடைகிறார்கள். மற்றவர்கள் எம் மருத்துவத்துக்கும் இணங்கி வருவதில்லை. ஆனால் இந்நோய் சுலபமாக சீக்கிரத்தில் குணமடைவதில்லை. நெடுநாட்கள் ஆகிறது. ஒருக்கால் குணமடைந்தாலும் மீண்டும் வருவதுண்டு. பரிகரிக்காமல் விட்டு விட்டால் நோயுற்றோன் மூட்டுகள் முடங்கி பலவீனமடைந்து வருந்துவான். சில ஆண்டுகளுக்குப் பிறகு இந்நோயினால் இறப்பான்.

பரிகாரம் : நோயை கணித்த பிறகு கிரமமாகவும் ஒழுங்காகவும் செய்யும் பரிகாரத்தை அனுசரிக்க வேண்டும்.

ஒய்வு : முதலில் நோயாளனுக்கு இந் நோயின் தன்மையைப் பற்றி விவரமாக பொறுமையுடன் கற்பிக்க வேண்டும். நோயின் முடிவை பயத்தை உண்டாக்கும் வகையில் நோயாளனுக்கு எடுத்துரைக்கக்கூடாது. ஆனால் அவனுடைய ஒத்துழைப்பு அவசியம் தேவை என்று வலியுறுத்த வேண்டும் பரிகாரம் செய்யும்போது, மருத்துவன், நோயாளி, நோயுற்றோன் உறவினர் ஆகியவர்கள் ஒத்துழைப்பு கட்டாயம் இருந்தே தீர வேண்டும். நோயாளனுக்கு நோய் குணமாகும் என்ற நம்பிக்கையை கொண்டு வரவேணும். அநேகருள் இந்நோய் தீராது என்ற உலக அனுபவம் ஊடுருவி பரவி இருப்பதாலும் இதற்கு நேர் மருந்து இல்லை என்ற குறைபட்டாலும், இந்நோய் வருவதற்குரிய தக்க காரணம் கண்டுபிடிக்

காமையாலும் மேற்சொன்ன முறைகளை மருத்துவன் அனுசரிப்பது மிகவும் நன்மையைப் பயக்கும்.

இந் நோய் பரிகாரமுறைக்கு இணங்கிவர அநேக நாட்கள் ஆகும். ஒரு ஆண்டுக்கு மேலும் செல்லும். இதனுல் நோயுற்ரேன் உறவினர் சலிப்புற்று மனம் தடுமாறி பேத குணங்களுக்கு உள்ளாவார்கள். அவர்களுக்கும் இந்நோயின் தன்மையையும் முடிவையையும் தக்க முறையில் கூறி அவர்கள் ஒத்துழைப்பையும் அவசியம் பெறுதல் வேண்டும். இல்லையேல் எல்லோருக்குமே நன்மையை பயக்காது.

உணவின் விகாரத்தால் இந் நோய் வந்ததென்று மனதில் உருவாக்கிக் கொண்ட நோயுற்ரேன் உணவை மாற்றி பத்திய உணவை உண்டால் நோய் தீரும் என்ற அவாவோடு இருப்பான். ஆதலினுல் உணவைப்பற்றி அவனுக்கு கற்பித்தல் அவசியம். போதுமான சீவ சத்துள்ள உணவை உண்ணச் செய்ய வேண்டும். வாதப் பொருள்களையும் கபப் பொருள்களையும் குறைத்தே உண்ண வேண்டும் என்று போதிக்க வேண்டும். சிலர் இடம் மாற்றம் செய்தல் நோய் தீரும் என்ற நம்பிக்கையோடும் இருப்பர். அவர்களுக்கு இந்நோய் எங்கு சென்ருலும் தன்னை தொடர்ந்தே வரும். இடமாற்றத்தால் எதிர்பார்த்தபடி மாறுவதில்லை என்ற கருத்தை நோயாளனுக்கு விளக்க வேண்டும்.

காலத்தை அனுசரித்து வராததினுல் இந்நோய் வரக் காரணமாகையால் காலஒழுக்கத்தை முறையாக அனுசரிக்க எச்சரிக்கவேண்டும்.

மருத்துவனும் நோயுற்ரேனும் ஒருவரை ஒருவர் புரிந்துக் கொண்டு பயத்தை தவிர்த்து நல்ல முறையில் கிரமமாக பரிகாரம் செய்தால் இந்நோய் படிப்படியாக மறைந்து விடும். நோயாளனுக்கு அவ்வப்போது இந்நோயின் தராதரத்தைப் பற்றி கற்பித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

ஆகவே, இந் நோயில் முதன்மையாக நோயாளியின் பயம், நோயாளியின் சோர்வு அல்லது அசதி, மூட்டுப் பிடிப்பு, மூட்டுவலி ஆகியவற்றைப் போக்க வேண்டும். இவைகளைப் போக்க பிரயத்தனப் படுதல் முறையாகும். நேர்மையாக பரிகாரம் செய்தால் நோயாளனும் மருத்துவனேடு அவசியம் ஒத்துழைப்பான்.

நோயாளனுக்கு ஒய்வு கொடுக்க வேண்டும். அவன் உடலுக்கு மட்டும் ஒய்வு கொடுப்பதுமல்லாமல் நோயுற்ற கீல்களுக்கும் ஒய்வு தருதல் வேண்டும். ஒரு நாளில் 10 மணி நேரம் படுக்கையில் ஒய்வு தருதல் வேண்டும். (அதாவது இரவில் 8-மணி நேரமும் பகலில் 2 மணி நேரமும் ஒய்வு தர வேண்டும்.)

ஒய்வு என்ருல் நாற்காலியில் உட்கார்ந்தோ சாய்ந்த நாற்காலியில் படுத்துக் கொண்டோ இருப்பதல்ல. நன்ருக அண்ணுந்து கால் கைகளை நீட்டி படுப்பது தான் இங்கு ஒய்வு எனப்படும். படுக்குமுன்னே பின்னே சிலமணி நேரம் மல்லாந்து படுப்பது மிகவும் நன்று.

கீல்களுக்கு மூங்கில் பத்தை அல்லது சன்னமான பலகைகளை இரு பக்கங்களிலும் அணைத்து மிருதுவான பஞ்சணையை பலகைக்கும் கீல்களுக்கும் நடுவில் வைத்து கட்ட வேண்டும். அதிகமாக இறுக்கியும் அதிகமாக தளர்த்தியும் கட்டலாகாது. அநேகமாக இராக்காலங்களில் இதனை செய்தல் வேண்டும்.

இந்நோயில் வலி, கீல்களில் முக்கியமாக உள்ள குறி குணமுள்ள படியால் முதலில் வலியைப் போக்க வேண்டும். வலியை போக்க உள் மருந்தும் வெளி மருந்தும் அளித்தல் வேண்டும்.

## வெளி மருந்து :

பொடுதலை இலை, கிணற்றுப்பூண்டு சமூலம், ஆகியவைகளை நன்ருக தண்ணீர் விடாமல் அரைத்து நல்லெண்ணெய்யும் கோழிமுட்டை வெண் கருவும் போதுமான அளவில் கலந்து கையில் பிசுபிசென்று ஒட்டாத நிலை வரையில் பிசைந்து தாபிதமடைந்த கீல்களில் அப்பி பூசவும். அதன்மேல் பஞ்சு சுருணைகளைப் பொருத்தி கீலகளில் அகப்புற பக்கங்களில் சன்னமான பலகையோ மூங்கில் பத்தையோ வைத்து கட்டி கீல்களை அசைய ஒட்டாதபடி ஒய்வு கொடுத்தல் வேண்டும்.

வலி தாங்க முடியாதாக யிருந்தால் முன்சொன்னவைகளோடு சடாமாஞ்சில், நாபி, சாம்பிராணி, பெருங்காயம், சுக்கு ஆகியவைகளை சேர்த்து அரைத்து பற்று போலாக்கி முன்போலவே கீல்களுக்கு கட்டவும்.

வலியும் நோயும் குறையாவிடில் குப்பைமேனி இலை, குரோசானி யோமம், குடியோட்டிப்பூண்டு, நாபி, ஊமத்தை ஆகியவைகளை சம எடைகொண்டு அபினி' கஞ்சா ஆகியவைகளை முற்சொன்னவைகளின் எடைக்கு 16ல் ஒன்ருக ஒவ்வொன்றையும் சேர்த்து தண்ணீர் விடாமல் அரைத்து கோழிமுட்டை வெண்கருவுடன் பிசைந்து பற்ருக கீல்களுக்கு கட்டலாம்.

சிறிது வீக்கமும் வலியுள்ள கீல்களில் மரமஞ்சள் வெடியுப்பு, செம்மண் காவி இவைகளை பொடியாக்கி முட்டையின் வெண்கருவில் குழைத்து பற்றிடவும்.

(தொடரும்)

# தமிழ்த் திருமணம்

[ கி. இராமலிங்கனார், எம்.ஏ. ]

## செய்முறையும் - விளக்கமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

### ii மணநிகழ்ச்சி முறை :

### (அ) முற்பகுதி

#### 1 மணமகன், மணமகளுக்கு நலங்கு :

மண நாள் காலை, மணமகனைப் பந்தலில் அமரச் செய்து பெண் வீட்டு, பிள்ளை வீட்டு வாழ்வரசியர் நலங்கு வைப்பர். பிறகு மணமகளுக்கு அப்படியே நலங்கு வைப்பர். மணமகனை மாப்பிள்ளைத் தோழர் அழைத்து வருவார், மணமகளைத் தோழி அழைத்து வருவார்.

#### 2 மணஆடை படைத்தல் ;

மண மகனும், மணமகளும் உடுத்திக் கொள்ள வேண்டிய மண ஆடைகளையும், பூமாலைகளையும் ஒரு தட்டில் வைத்து, அம்மையப்பர்முன், மண ஆசிரியர் படைப்பார்.

#### 3 மண ஆடைக்கு அவையினர் வாழ்த்து

பிறகு அந்தத்தட்டை அவையினரிடம் எடுத்துச்சென்று, அவையில் மூத்தவர்கள், ஆடையைத் தொட்டு வாழ்த்தச் செய்வார்கள்.

#### 4 மண ஆடை வழங்கல் :

மணமகனை, மணப்பந்தருக்கு, மாப்பிள்ளை அழைத்து வருவார். அவருக்குரிய மணஆடை, மாலையை, அவருக்கு வாழ்த்தியளிப்பார் ஆசிரியர். தோழி அழைத்துவர மணமகளும் பந்தருக்கு வந்து மண ஆடை-மாலையைப் பெற்றுச் செல்வாள்.

#### 5 அரசாணிக்கால் நடுதல் :

இலையோடு கூடிய அரச மரத்துக் கொம்பு ஒன்றுக்கு, ஐந்து வாழ் வரசியரைத் திருமஞ்சனம் ஆட்டச் செய்து, மஞ்சள் குங்குமம் பூ அணி வித்து, பந்தரின் கீழ்ப்புறத்துக்கு கால்களுக்கு நடு இடையே, நிறைகுடங்

களையொட்டி, கெட்டி மேளங்கொட்ட, அந்த அரசங்காலை ஆசிரியர் நடச் செய்வார். திருமணத்திற்கு இது ஆணிக்கால்.

6 மணப் பொங்கல் :

மணப்பந்தரின் கீழ்ப்புறமாக, ஒரு மண் செப்பில் சோறுபொங்கி. இலைகளில் இட்டு வைப்பர் வீட்டுப் பெண்கள். மணமகனும் மணமகளும் மண ஆடையுடுத்தி மாலையணிந்து, வலமாக வந்து, படையல்களின் முன்பு நின்று' கற்பூரம் காட்டி வழிபடுவர்.

7 காப்புக்கட்டல்

மாப்பிள்ளையும் பெண்ணும் மணமனையில் பெண் வலமிருக்க. அமர்ந்ததும், ஆசிரியர் அரசாணிக் காலுக்கு, மஞ்சட்கொம்பு கட்டிய ஒரு மஞ்சள் நூலைக் காப்பாகக் கட்டுவார். பிறகு மாப்பிள்ளைக்குக் கட்டுவார். அடுத்து பெண்ணுக்கு மாப்பிள்ளையைக் கட்டச் செய்வார். காப்புக்கட்டும்போது கெட்டி மேளம் கொட்டும்.

8 பெற்றோர் போற்றல் :

மாப்பிள்ளை தன் பெற்றோருக்குத் திருவடி பூஜை செய்வார். அப்படியே பெண்ணும் செய்வார். ஆசிரியர் செய்விப்பார்.

9 ஓம்படை செய்தல் :

மாப்பிள்ளையின் பெற்றோர் தம் மகனின் வலக்கையைப் பிடித்து வந்த பெண்ணின் பெற்றோர், தம்மகளின் வலக்கையை எடுத்து, மாப்பிள்ளையின் வலக்கையில் வைத்து, பல்லாண்டு ஓம்பி வாழ்க! என வாழ்த்துவர்.

(ஆ. நடுப்பகுதி)

1 இறை வழிபாடு :

மஞ்சளிலுள்ள முன்னவனுரையும் அன்னையும் தந்தையுமாக இரண்டு செம்புகளில் நிறுவியுள்ள இறைவனையும் மணமக்கள் மலர்தூவி வழிபடுவர்.

2

தாலிகோத்த மங்கல நாண், ஒரு தட்டில், அரிசியின் மீது வைத்த தேங்காயில் சுற்றப் பெற்றிருக்கும். தேங்காய்க்கு மஞ்சள் குங்குமம்

இடப்பெற்றிருக்கும். இத்தட்டு அம்மையப்பர் முன்பு, வழிபடும்போது வைக்கப் பெற்றிருக்கும்.

2 மங்கல நாணுக்கு அவையினர் வாழ்த்து :

மங்கல நாண் தட்டை மண ஆசிரியரோ, வேறு பெரியவரோ, அவையினரிடம் எடுத்துச் சென்று, தொடச் செய்து. வாழ்த்து பெறுவார்.

கூடவே, இன்னொருவர் ஒருதட்டில் மஞ்சள் அரிசியும் மலரும் கலந்து கொண்டு செல்வார். மங்கலநாண் சூட்டும்போது, தூவி வாழ்த்துவதற்கு, அவையினர் அரிசி மலரில் சிறிது எடுத்துக் கொள்வர்.

3 அழல் ஓம்பல் I (தீ வடிவான இறைவனைப் போற்றி):

மணமக்கள் முன்பு, ஒன்பது வகை மரக்குச்சிகளை வைத்து, நெய் விட்டுஓமம்வளர்த்துவார் ஆசிரியர். மணமகன் நெய் சொரிந்து கொண்டே இருப்பார்.

4 மங்கலநாண் சூட்டல் :

கைவிளக்கை, மணமகளின் உடன்பிறந்தாள் ஏந்தி மணமகனின் பின்புறம் நிற்க' மங்கலநாணை மாப்பிள்ளை இருகையில் தாங்கி, பெண்ணின் கழுத்தில் சூட்டி மூன்று முடிச்சுகள் இடுவார். கெட்டிமேளம் கொட்டும். அவையினர் அரிசிமலர்ச் சொரிந்து வாழ்த்துவர்.

முடிச்சின் மீது மஞ்சள் இட்டுக் குங்குமம் வைப்பார் மாப்பிள்ளை; பெண்ணின் நெற்றியில் வறப்புறமாகக் குங்குமம் இடுவார்.

5 பட்டங்கட்டல் :

'மாமிப்பட்டம்' 'நாத்திப் பட்டம்' என்றெல்லாம் மணமக்களின் பழைய உறவினர்களும், மணத்தினுல் புதிதாக உறவினர் ஆனவர்களும் தங்கள் தங்கள் உறவின் முறையைக் கூறி மணமக்களின் நெற்றியில் தங்கத் தகட்டுப் பட்டம் கட்டுவர். சிலர் பொற்காசும் கட்டுவர்.

6 மாலை மாற்றல் :

மணமக்கள் எழுந்து நின்று, மூன்று முறை மாலை மாற்றிக் கொள்வர்.

[தொடரும்]

சிவமயம்
கணபதி துணை

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்
அருளிய

# கோளறு பதிகம்

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும்
[செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்— உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை.

வேதா சலநகரில் வேண்டு வரங்கொடுக்கும்
தாதாவாய் ஓங்கு தனிமுதலே— மாதார்ந்த
பாகன் திருமதலாய் பால விநாயகனே
ஏகதந்த எங்கட் கருள்.

## முன்னுரை

கோளறு பதிகமென்றால் கிரகங்களால் நேரும் துன்பங்களை நீக்குவதற்குக் காரணமாகிய பதிகம் என்பது பொருள்.

இப்பதிகத்தை நாடோறும் ஓதுகின்றவர்கட்கு நவக்கிரகங்களால் ஆகிய தோஷங்கள் விலகும். யாத்திரை புறப்படும்பொழுது இதனை ஓதி

புறப்பட்டால் தீமை விலகி நன்மை விளையும் என்பது உறுதி. ஆகையால் அன்பர்கள் யாவரும் தினந்தோறும் ஒரு முறை படித்துத் தீமை நீங்கி நன்மை பெற்று வாழ்வார்களாக!

தண்டமிழ்ப் பாண்டி நாட்டினையாண்ட கூன் பாண்டியனும் குடிமக்களும் சைவ சமயத்தைக் கைவிட்டுச் சமண சமயத்தைச் சார்ந்தனர். இதைக்கண்ட பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறை நாயனாரும் மனம் புழுங்கினர்; அப்பொழுது வேதாரணியத்தில் எழுந்தருளியிருந்த திருஞான சம்பந்தப் பிள்ளையாரைக் கொண்டு சமண சமயத்தை ஒழித்துச் சைவத்தை நிலைநாட்டி மன்னனையும், குடிகளையும் திருத்தலாம் என எண்ணித் திருஞான சம்பந்தப் பெருமானுக்கு விண்ணப்பமனுப்பினர். அப்பெருமான் அவர்கள் வேண்டுகோட்கு இணங்கி பாண்டிய நாட்டிற்குப் புறப்பட்டபோது அத் திருஞான சம்பந்தருடன் வேதாரணியத்தில் எழுந்தருளியிருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பெருமானை நோக்கி "நாளும் கோளும் வலியில ஆகையால் செல்ல வேண்டாம்" எனத் தடுத்தனர். அதனைக் கேட்ட பிள்ளையார் "வேயுறு தோளி ...... ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே" என எடுத்து இத்திருப்பதிகத்தை ஓதியருளிப் புறப்பட்டுச் சென்று மன்னனையும் குடிகளையும் திருத்திச் சைவசமயத்தில் சாரச் செய்தனர் என்பது வரலாறு. இப்பதிகத்தை உரையுடன் பதிப்பித்து வெளியிட வேண்டுமென்று அன்பர்கள் விரும்பியபடி பொழிப்புரை எழுதி வெளியிடத் திருவருள் துணை செய்தது. நாள்தோறும் நியமத்தோடு படித்து வந்தால் நவக்கிரக தோஷங்கள் யாவும் நீங்கி நன்மை பெறுவர் என்பது உறுதி.

வித்வான்

புலவர் பூசை ஆ. நமச்சிவாய முதலியார்.

திருச்சிற்றம்பலம்

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட  
மிகநல்ல வீணை தடவி [கண்டன்  
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்  
உளமே புகுந்த அதனால்  
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்  
சனிபாம் பிரண்டு முடனே [வெள்ளி  
ஆசறு நல்ல அவைநல்ல நல்ல  
அடியா ரவர்க்கு மிகவே. 1

மூங்கில் போன்ற தோள்களையுடைய உமா தேவியாரை இடப் பாகத்தில் கொண்டவரும், ஆலகால விஷத்தையுண்ட திருநீலகண்டத்தை யுடையவரும் ஆகிய இறைவர் நன்மையாகிய வீணையை வருடி, குற்ற மற்ற சந்திரனையும் கங்கையையும் திருமுடியிற்சூடி, எனது உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்ற காரணத்தால், சூரியனும், சந்திரனும், செவ்வா யும், புதனும், குருவும், சுக்கிரனும், சனியும், ராகுவும், கேதுமாகிய இக்கிரகங்கள் குற்றமற்றனவாகி அடியவர்களுக்கு நல்லன நல்லன; அவைகள் நல்லனவே செய்யும் நல்லனவே செய்யும் (தீமை செய்யா).

என்பொடு கொம்பொ டாமை யிவைமார்
எருதேறி யேழை யுடனே [பிலங்க
பொன்பொதி மத்தமாலை புனல் சூடி வந்தே
னுளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொடாறு
முடனாய நாள்க ளவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 2

எலும்பும் பன்றிக் கொம்பும் ஆமையோடும் ஆகிய இவைகள் திரு மார்பில் விளங்க, அழகு நிறைந்த ஊமத்தமலர் மாலையையும் கங்கை யையும் திரு முடியில் தரித்த சிவபெருமான் உமாதேவியாருடன் இடப வாகனத்தில் அமர்ந்து வந்து அடியேனுடைய உள்ளத்தில் புகுந்திருக் கின்ற காரணத்தினால், வழி நடைக்கு ஆகாதனவாகிய ஆயிலியம், மகம், விசாகம், கேட்டை திருவாதிரையும் இவைகளோடு சேர்த்து எண்ணப் படும் நக்ஷத்திரங்களும் திருத்தொண்டர்களுக்கு அன்போடு நல்லன; நல்லன; அவைகள் நல்லனவே செய்யும். நல்லனவே செய்யும். (தீமை செய்யா.)

உருவளர் பவள மேனி யொளிநீ றணிந்து
உமையொடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேலணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
திருமகள் கலைய தூர்தி சயமாது பூமி
திசைதெய்வமான பலவும்
அருநெறி நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 3

அழகு மிகுகின்ற பவளம் போன்ற சிவந்த திருமேனியில் ஒளிமிக்க திரு வெண்ணீற்றையணிந்து, வாசனை வீசும் கொன்றை மாலையையும் சந்திரனையும் திருமுடியிற் சூடிய சிவபெருமான், வெண்ணிறம் வாய்ந்த எருதின்மேல் உமா தேவியாரோடும் வந்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளி இருக்கின்ற காரணத்தால், திருமகளும் கலைமகளும், கொற்றவையும், பூமகளும் அட்டதிக்குப் பாலர்களாகிய இந்திரன், அக்கினி யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் இவர்களும், பல தெய்வங்களும் அடியவர்களுக்கு நல்லன; நல்லன; அவைகள் நல்லனவே செய்யும்; நல்லனவே செய்யும். (தீமை செய்யா.)

மதிநுதல் மங்கை யோடு வடபா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றை மாலை முடிமே [லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
கொதியுறு கால னங்கி நமனோடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுண நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 4

பிறை போலும் நெற்றியையுடைய உமாதேவியோடு வட திசையின் கண் இருந்து வேதங்களைத் திருவாய் மலர்ந்தருளிய எங்கள் சிவபெருமான், கங்கை நதியோடு கொன்றை மாலையையும் திருமுடியிற்சூடி, எனது உள்ளத்தில் புகுந்து வீற்றிருக்கின்ற காரணத்தால், காலனும் தீயும், நமனும், யமதூதர்களும், கொடிய பிணிகளும் ஆகிய எல்லாம் திருத்தொண்டர்களுக்கு அதிக குணஞ் செய்யக் கூடியன வாய் நல்லன; அவைகள் நல்லனவே செய்யும். நல்லனவே செய்யும். (தீமை செய்யா)

நஞ்சணி கண்ட னெந்தை மடவாள னோடு
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னி கொன்றை முடிமே [லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுண ரோடு முருமிடியு மின்னு
மிகையான பூதமவையும்
அஞ்சிடு நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 5

ஆலகால விடத்தையணிந்த திருநீலகண்டத்தையுடையவரும், எமது தந்தையும், உமா தேவியாரோடு இடபவாகனத்தின் மீதுஊர்ந்து வருபவருமாகிய எங்கள் பரமசிவனுர், வன்னிப் பத்திரத்தையும் கொன்றை மலரையும் திருமுடியில் தரித்து அடியேனதுஉள்ளத்தில் எழுந் தருளியுள்ள காரணத்தால் கொடுமையான கோபத்தையுடைய அரக்கர் களுடன் இடியும் மின்னலும் பூதங்களும் திருத்தொண்டர்களுக்குப் பயப் படும் தன்மையுடையன. நல்லன; நல்லன; அவைகள் நன்மையே செய்யும். நன்மையே செய்யும். (தீமை செய்யா.)

வாள்வரி யதள தாடை வரிகோவ ணத்தர்
மடவா டனேடு முடனுய்
நாண்மலர் வன்னி கொன்றை நதிசூடி வந்தெ
னுளமே புகுந்த அதனுல்
கோளரி யுழுவை யோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 6

ஒளி பொருந்திய புலிந்தோலாடையும், வரிந்த கௌபீனத்தையும் உடைய இறைவர் புதிய மலர்களுடன் வன்னிப் பத்திரத்தையும் கொன்றை மாலையையும் கங்கை நதியையும் திருமுடியிற்சூடி, உமாதேவி யாருடன் எழுந்தருளி வந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத் தால், கொலைத் தொழிலையுடைய சிங்கம், புலி, யானை, பன்றி, பாம்பு, கரடி, மனிதத்தன்மை வாய்ந்த குரங்கு ஆகிய இவைகள் திருத்தொண் டர்களுக்கு மிகவும் நல்லன; நல்லன; அவைகள் நலனே செய்யும். (தீமை செய்யா.)

செப்பிள முலைநன் மங்கை யொருபாக மாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியு மப்பு முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனுல்
வெப்பொடு குளிரும் வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 7

உமாதேவியார் ஒரு பாகத்தில் இருக்க விடையூர்ந்து வரும் அருட் செல்வராகிய இறைவர், இளமதியையும் கங்கை நீரையும் திருமுடியில் சூடி. அடியேனுடைய உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தால், வெப்பு நோயும்' நளிர் சுரமும், வாத நோயும், அதிகரித்த பித்தமும், மற்று தீவினைகளும் திருத்தொண்டர்களை வருத்தாத விதத்தில் நல்லன; நல்லன; அவைகள் நலனே செய்யும். (தீமை செய்யா.)

வேள்பட விழிசெய் தன்று விடைமேலிருந்து
மடவா டனோடு முடனாய்
வாண்மதி வன்னி கொன்றை மலர்சூடி [வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழி லங்கை யரையன்ற னோடும்
இடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 8

மன்மதன் சாம்பலாகும்படி திருக்கண்ணை விழித்து நோக்கி உமா தேவியாருடன் கூடி, சந்திரன் வன்னி கொன்றை மலர்களைச் சூடி, இடபத்தின்மேல் வந்து அடியேனது உள்ளத்தில் புகுந்த காரணத்தால், ஏழு கடல்களும் பிற துன்பங்களும் வந்து வருத்தமாட்டா; திருத்தொண்டர்களுக்கு நல்லன; நல்லன; அவை நலனே செய்யும், (தீமை செய்யா.)

பலபல வேட மாகும் பரனார் பாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனு மாலு மறையோடு [தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேரு நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 9

பலப்பல திருஉருவங்களோடு கூடிய பரமரும் உமா தேவியை ஒரு பாகத்தில் கொண்டவரும் விடையூர்ந்து வருகின்றவருமாகிய எங்கள் பரமர், கங்கை நதியையும் எருக்கு மலரையும் திருமுடியிற்சூடி, அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தால், பிரமதேவரும் திருமாலும் பிற தேவர்களும் வேதங்களும் மாறி வருகின்ற காலங்களும் அலைகடலும் மேரு மலையும் ஆகிய எல்லாம் திருத்தொண்டர்களுக்கு நல்லன; நல்லன; மிகவும் நலனே செய்யும். (தீமை செய்யா.)

கொத்தலர் குழலி யோடு விசயற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமு மதியு நாக முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனல்
புத்தரொ டமணை வாதில் அழிவிக்கு
திருநீறு செம்மை திடமே [ண்ணல்
அத்தகு நல்ல நல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 10

பூங் கொத்துக்கள் பரந்த கூந்தலையுடைய உமாதேவியாரோடு வந்து அர்ச்சுனனுக்கு அருள்புரிந்த நன்மையுடைய வேடராகிய இறைவர், ஊமத்த மலரையும் பிறைச் சந்திரனையும் நாகத்தையும் திருமுடியில் தரித்து அடியேனது உள்ளத்தில் எழுந்தருளிய காரணத்தால், பெரியவராகிய சிவபிரானது திருநீறு புத்தர்களுடனே சமணர்களையும் வழக்கில் தோல்வியடைந்து கெடச் செய்யும். இது உண்மையும் உறுதியுமாகும். அந்தத் தகுதியினுல் தொண்டர்களுக்கு அவர்களால் வரும் தீயன யாவும் நல்லன; நல்லன; நலனேயாகும். (தீமையாகா.)

தேனமர் பொழில்கொ ளாலை விளைசெந்நெல்
வளர்செம்பொ னெங்கு நிகழ [துன்னி
நான்முக னாதி யாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளு நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ண முரைசெய்
ஆனசொல் மாலை யோதும் அடியார்கள்
அரசாள்வர் ஆணை நமதே. [வானில் 11

தேன் நிறைந்த சோலைகளும் கரும்பாலைகளும் செந் நெற் பயிர்களும் நிறைந்ததனுல் செல்வ வளமிக்கதும் பிரமதேவரால் பூசிக்கப்பட்டதுமாகிய பிரமாபுரம் என்னும் சீர்காழியில் அவதரித்த வேதஞானத்தையுடைய திருஞான சம்பந்தன். சூரிய சந்திரன் முதலிய ஒன்பது கோள்களும் அஸ்வனி முதலிய நக்ஷத்திரங்களும் பிறவும் திருத்தொண்டரை மேவிவருத்தாதபடி உரைத்த நன்மைதரும் இப்பாமாலையாகிய பதிகத்தை ஓதுகின்ற அடியவர்கள் அமர உலகில் அரசராக ஆட்சி புரிவர். இது நமது ஆணை.

  

## மூலிகைமணியின் வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| நம் நாட்டு மூலிகைகள் | 1-ம் பாகம் (அச்சில்) | ரூ 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 2-ம் பாகம் (அச்சில்) | 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 3-ம் பாகம் | 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 4-ம் பாகம் | 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 5 ம் பாகம் | 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 6-ம் பாகம் (அச்சில்) | 6 | 00 |
| நம் நாட்டு மூலிகைகள் | 7-ம் பாகம் | 7 | 00 |
| நோயும் மருந்தும் | 1-2 பாகம் (அச்சில்) | 3 | 00 |
| நோயும் மருந்தும் | 3-4 பாகம் (அச்சில்) | 3 | 00 |
| சித்த மருத்துவத்தின் கருப்பொருள் | | 2 | 00 |
| புகழ்பெற்ற மூலிகைகள் (அச்சில்) | | 1 | 00 |
| மனித உறுப்புகளில் மூலிகைகளின் குணாதிசயங்கள் | | 1 | 00 |
| பயன்தரும் பத்துக் கீரைகள் (அச்சில்) | | 1 | 00 |
| சக்திதரும் சஞ்சீவி மூலிகைகள் | | 1 | 00 |
| குழந்தை பிணிகளும் மூலிகை மருத்துவமும் (அச்சில்) | | 1 | 00 |

ஒரு புத்தகத்திற்கு தபால் செலவு 25 காசு சேர்த்து அனுப்பவும். மொத்த புத்தகமும் தபாலில் பெற புத்தக விலையுடன் ரூ. 4-50 சேர்த்து கீழ்கண்ட முகவரிக்கு மணியார்டர் அனுப்பி பெறலாம்.

மூலிகைமணி
7, அருளாம்பாள் தெரு, தி. நகர். சென்னை-600 017.

## மகா மூலிகை எண்ணெய்!

- காலில் ஆணி, தோலைப்பற்றிய நோய்கள்,
- வெண்குட்டம், உடலில் அசுத்த நீர்த் தேக்கம்
- காலில் வீக்கம், எடை குறைய.

போன்ற கொடிய நோய்களை வேருடன் களைய மேற்கண்ட 'மகா மூலிகை எண்ணெ''யை பத்தியமுடன் சாப்பிட ஆச்சர்யமடையும் வகையில் குணமாகும். மேக நோய்கள் உடையவர்களுக்கு இந்த எண்ணெய் ஓர்சிறந்த நிவாரணியாகும் ஷ எண்ணெயை பெற விரும்புவோர். ரூ. 34 M. O. மூலம் அனுப்பி பெறலாம்.

மூலிகை மணி அலுவலகம்
7, அருளாம்பாள் தெரு, தி. நகர். சென்னை - 600 017.

வெளியிடுபவரும் ஆசிரியரும்; வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர், R.M.P. 7, அருளாம்பாள் வீதி, தி. நகர்
சென்னை - 600 017, மூலிகை மணி அச்சகத்தில் அச்சிட்டவர்:
K. பாபு, D.M.E., சென்னை - 600 030.